2 பக்கங்கள் 15 காசுகள்

பதிவு எண் எம். 8798

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 13 மதுரை 9—8—75 சனி மலர் 160

## 3800 பேர்தான் கைது இது அரசு தரும் தகவல்

புதுடெல்லி, ஆக. 8—

அவசரநிலைப் பிரகடனம் செய்யப்பட்டபின்பு நாடு முழுவதும் 3800 பேர்தான் கைது செய்யப்பட்டுள்ளார்கள் என்று அரசு அறிவிக்கிறது.

இதில் ஆர். எஸ். எஸ். சங்கத்தினர் 2300 பேரும், ஆனந்த மார்க்கிகள் 400 பேரும், தீவிர கம்யூனிஸ்டுகள் 400 பேரும், ஜமாத்-இ-இஸ்லாமி இயக்கத்தினர் 750 பேரும் ஆவார்களாம்.

தவிர பதுக்கல், கள்ளக் கடத்தல் போன்ற பொருளாதாரக் குற்றங்களுக்காக 600 பேரும் கைதாகியுள்ளனராம்.

## மிஜோ முன்னணிக்கு தடை

புதுடெல்லி. ஆக. 8—

மிஜோ தேசிய ராணுவம் உட்பட மிஜோ தேசிய முன்னணி, மற்றும் அதன் தொடர்புடைய அத்தனை அமைப்புகளையும் இந்திய அரசு தடை செய்துள்ளது. இதற்கான அதிகாரப்பூர்வ கெஜட் அறிவிப்பு 6ந் தேதி வெளியிடப்பட்டது. மிஜோ தேசிய முன்னணியும் மற்றும் அதன்சார்பு அமைப்புக்களும், மிஜோரம் யூனியன் பிரதேசத்தையும்- மணிப்பூர், திரிபுரா பகுதிகளில் மிஜோ மற்றும் குடியினர் வாழும் பகுதிகளையும் சுதந்திரமடையச் செய்யும் நடவடிக்கைகளில் ஈடுபட்டிருப்பதாகவும், அதைத் தொடர்ந்தே இந்த தடைசெய்யும் நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டதாகவும் மத்திய அரசு அறிவிப்பு கூறுகிறது.

## தேர்தல்குற்றத்திற்கானதண்டனைக்காலத்தை

# ஜனாதிபதிதான் தீர்மானிப்பார்

## திருத்தச் சட்டம் கூறுவது என்ன?

புதுடெல்லி, ஆக. 8

**இந்திய அரசியல் சட்டத்தின் கட்டுக்கோப்பு முழுவதையுமே பரிசீலிக்க வேண்டிய தருணம் வந்திருப்பதாக மத்திய சட்டமந்திரி எச். ஆர். கோகலே கூறினர். சீக்கிரமே இப்பரிசீலனையில் ஈடுபடப்போவதாகவும் அவர் தெரிவித்தார்**

அவர் மேலும் பேசுகையில், 'லோக சபையில் ஒரு யோசனை தெரிவிக்கப்பட்டது. அதாவது, தேர்ந்தெடுக்கப்பட்ட சில பதவிகளில் உள்ளவர்கள் மீது நடவடிக்கை எடுக்க நீதிமன்றங்களுக்கு உரிமை தரக்கூடாது என்று யோசனை தெரிவித்தனர். அது பாராட்டக்கூடிய நல்ல யோசனைதான்"—என்று வரவேற்ருர்.

### கோர்ட் தலை நீட்டக்கூடாது

அந்த யோசனை பற்றி கோகலே தனது கருத்தைக் கூறுகையில், "தேர்ந்தெடுக்கப்பட்ட பதவிகள் அனைத்தின் மீதும் கோர்ட் தலையிட்டு, தீர்ப்புக்கூற அதிகாரம் பெற்றிருந்தாலும் சில பதவிகளைப் பற்றியாவது—அதாவது, ஜனாதிபதி உதவி ஜனாதிபதி, பிரதம மந்திரி, சபாநாயகர் போன்ற தேர்ந்தெடுக்கப்பட்ட பதவிகளையாவது, நீதிமன்றங்களின் ஆய்வினின்றும் விடுவித்து காப்பளிக்கவேண்டும் என்றும் கூறினர்.

பார்லிமெண்டினல் நிறைவேற்றப்பட்ட சட்டத்தின்—அது பல்லாண்டுகளுக்கு முன்னே நிறைவேற்றப்பட்ட சட்டமாக இருப்பினும் கூட— அதன் உண்மையான நோக்கத்தை உடைக்கும் வகையில், சட்டவிதிகள் விளையாட அனுமதிக்கக்கூடாது"— என்றும் கூறினர்.

இப்போதைய தேர்தல் சட்டமானது அரசாங்க ஊழியர்கள் உதவி செய்வதையும், வேலையில் ஏற்படும் குறைபாடுகள் ஏற்படுவதையும் சாக்காகக் கொண்டு, ஒருவரின் தேர்தலே செல்லாது என்று அடித்து விடுகிறது என்றும், அந்தப் பழைய போக்கைத்திருத்தவே, இந்தப்புதிய திருத்தம் என்றும் கூறினர்.

### திருத்தச் சட்டத்தை ஜனாதிபதி ஏற்ருர்

தேர்தல் சட்டத்தில் மாறுதல் செய்துள்ள திருத்தச்சட்டத்தை, பார்லிமெண்டில் நிறைவேற்றிய அன்று இரவேஜனாதிபதி பக்ருதின் அலி அகமது கையெழுத்திட்டார். இது பின் தேதியிட்டு அமுலுக்கு வரும்.

அந்த திருத்தச் சட்டத்தில் என்ன சொல்லுகிறது:

1. தேர்தலில் ஒருவர்நாமினேஷன் தாக்கல் செய்த தேதியிலிருந்து மாத்திரமே அவர் வேட்பாளர் என்று கருதப்படுவார்.

2. ஊழல் செயல்களின் காரணமாக எந்தவொரு வேட்பாளரையாவது தகுதியற்றவர் என்று கூறி ஒருகுறிப்பிட்ட காலம் வரையும் தேர்தலில் நிற்கத்தடை விதிக்கப்படுமானல்,எவ்வளவுகாலத்துக்கு தடை விதிக்கப்பட வேண்டுமென்பதை தேர்தல் கமிஷனுடன்கலந்துஆலோசித்து ஜனாதிபதி முடிவு செய்வார்.

3. தேர்தல் சட்டப்படி வேட்பாளர்களுக்கு ஒதுக்கப்பட்ட எந்தவொரு சின்னமும் தேசீயச் சின்னமென்ருே, மதச்சின்னமென்ருே கருதப்படக்கூடாது.

4. ஒரு அரசு அதிகாரியின் உதவியை தனது தேர்தல் வெற்றிக்காக,கேட்டுப்பெற்ருல், அது ஊழல் ஆகும் என்று இப்போதுள்ள தேர்தல் சட்டம் கூறுகிறது.

ஒரு அரசு அதிகாரி தனது அதிகார பூர்வமான கடமையைச் செய்வாரானல், அத்தகைய செயலோ நடவடிக்கையோ ஊழல் ஆகாது என்று இப்போதைய திருத்தச்சட்டம் கூறுகிறது.

5. ஒரு மத்திய அல்லது மாநில அரசின் அதிகாரியின் நியமனம், ராஜிமா அல்லது சேவை முடிவு முதலியன அரசாங்க கெஜட்டில் பிரசுரிக்கப்பட்டு அந்த கெஜட்டில் எந்த தேதியிலிருந்து அது அமுலுக்கு வருவதாகக் கூறப்பட்டுள்ளதோ, அதுதான் முடிவானதும், இறுதியானதும் என்று கருதப்படவேண்டும் என்று திருத்தச்சட்டம் கூறுகிறது.

## தகப்பனும் பிள்ளைகளும் கூண்டோடு தற்கொலை

மேட்டூர், ஆக, 8—

மேட்டூரையடுத்த மேச்சேரி சாமராஜப்பேட்டையில், கொல்லுப்பட்டறை வைத்திருக்கும் கண்ணுப்பையன் (55 வயது) என்பவர். என்ட்ரின் என்ற விஷ மருந்தை தனது 15 வயதுள்ள மகன் ராஜூவுக்கும் 14 வயதுள்ள மகள் பாப்பாத்திக்கும், 13 வயதுள்ள இளைய மகள் ஆயிரத்துக்கும் கொடுத்து, தானும்அதைக் குடித்து தற்கொலை செய்து கொண்டதாகத் தெரிகிறது.

காரணம் என்ன? கொல்லுப்பட்டறையில் சரிவர வேலை நடைபெறவில்லை. வருமானமின்றி, பல நாள் பட்டினி கிடந்து, மேலும் வறுமையும் பசிக்கொடுமையும் தாளாமல், சாவதே மேல் என்ற முடிவுக்கு வந்து, விஷமருந்தி மாண்டனர்.

சாட்சி: விஷமருந்திய பாட்டிலும் டம்ளரும்தான்.

இப்படிப்பட்டவர்களுக்கெல்லாம் விடிவுகாலம் எப்போது?

## பிரிட்டனில் இனப் பாகுபாடுகள் நிலவுகின்றன

### தொழிற்கட்சியின் திடீர் 'கண்டு பிடிப்பு'

லண்டன், ஆக. 6—

பிரிட்டனில் குறிப்பாக வேலை, இருப்பிடம் ஒதுக்குவதில் கல்வி நிலையங்களில்நிற வேற்றுமை பாகுபாடு குற்றங்கள் நிலவுவதாக அந்நாட்டு ஆளுங் கட்சியான தொழிற்கட்சி கண்டுபிடித்து விட்டதாம்.

கடந்த திங்கட்கிழமை தொழிலாளர் கட்சி இக் 'கண்டு பிடிப்பை' தனது அறிக்கையொன்றின் மூலம் அறிவித்துள்ளது.

இப்"புதிய" கண்டு பிடிப்பை தொடர்ந்து, அப்பாகுபாட்டை எதிர்த்து அரசாங்கம் போராட தனது சக்தியைப் பயன்படுத்த வேண்டும் என்றும் அக்கட்சி தனது அறிக்கையில் வற்புறுத்தியுள்ளது.

நிறவேற்றுமையால் பாதிக்கப்படுபவர்களுக்கு குறிப்பாக கறுப்பர்களுக்கு நகர்களின் உட்பகுதிகளில் வீட்டுவசதிகள், கல்விவசதி, பயிற்சி வசதிகள், எல்லாவற்றிற்கும் மேலாக வேலை வாய்ப்புகள் செய்து தர பெரும் முயற்சியும் ஏராளமான நிதியும் தேவைப்படும் என்றும் அரசாங்கத்திற்கு அந்த அறிக்கை சுட்டிக் காட்டுகிறது.

மேலும் நிறவேற்றுமை பாகுபாடுகளை சட்டவிரோதமாக்கும் தற்போதைய சட்டங்களை இன்னும் பலப்படுத்த வேண்டும் என்றும் அனைத்து இனத்தவரின் சமத்துவத்தை பாதுகாக்கும் பொருட்டு ஒவ்வொரு அரசாங்க அமைச்சரவையிலும் ஒவ்வொரு குழு நியமிக்கப்பட வேண்டும் என்று வற்புறுத்தியுள்ளது.

திடீர் ஞானோதயம் கொண்ட அக்கட்சி, இனப் பாகுபாடு பற்றிய பிரச்சினைகள் நாட்டில் உள்ளன. அவைகள் தீர்க்கப்பட வேண்டியுள்ளது என்பதை அரசாங்கம் ஒப்புக்கொள்ள வேண்டும் என்றும் அறிவுரை வழங்கியுள்ளது.

## இந்தோனேஷிய அமைச்சரின் திருப்தி

புதுடெல்லி, ஆக. 5—

இந்திய அரசாங்க தலைவர்களோடு நடத்திய பேச்சுவார்த்தையில் தான் மிகவும் அதிகமான திருப்தி கொண்டுள்ளதாக சமீபத்தில் இந்தியாவுக்கு வந்துசென்ற இந்தோனேஷிய வெளிநாட்டு அமைச்சர் மாலிக் கூறியுள்ளார்.

இந்தோனேஷியாவின் தலைநகரான ஜகார்தாவை அவர் கடந்த ஞாயிற்றுக் கிழமை அடைந்தபோது நிருபர்களிடையே பேசினர். அப்போது அவர் மேற்கண்டவாறு கூறினர்.

அடுத்த ஆண்டு இந்தோனேஷியாவின் ஜனாதிபதியான சுகார்தோ இந்தியாவுக்கு விஜயம் செய்வார் என்றும் அவர் கூறினராம்.

மேலும், இந்தோனேஷியாவின் தொழில் நுணுக்க குழு ஒன்று இந்தியா செல்லும். எந்தெந்த துறையில் இருநாடுகளுக்குமிடையே பொருளாதார கூட்டு ஒத்துழைப்பு மேற்கொள்ள சாத்தியம்உள்ளதுஎன்பதுபற்றி அக்குழு யோசனை தரும் என்றும் இந்தோனேஷியா வெளிநாட்டமைச்சர் ஆடம் மாலிக் நிருபர்களிடம் தெரிவித்தார்.

## ஆக. 24ல் நாரண துரைக்கண்ணன் முத்துவிழா

சென்னை, ஆக. 8—

முதுபெரும் எழுத்தாளர் 'கலைமாமணி' திரு. நாரண துரைக்கண்ணனின் முத்துவிழா (70 வது பிறந்தநாள் விழா) இம்மாதம் 24-ந் தேதியன்று சென்னையில் சிறப்பாக நடக்கவிருக்கிறது. அன்று அவருக்கு முதலமைச்சர் திரு. மு. கருணாநிதி பொன்னாடை போர்த்தி பொற்கிழியும் வழங்குவார்.

இந்த விழாக்குழுவிற்கு திரு மீ. சு. இளமுருகு தலைவராகவும், திரு மா. செங்குட்டுவன், திரு சேதுராமன் ஆகியோர் அமைப்பாளர்களாகவும், திரு தி வ மெய்கண்டார்செயலாளராகவும், திரு இளங்கோ துணைத்தலைவராகவும் பொறுப்பேற்று பணியாற்றி வருகின்றனர்.

## அவசரநிலைக்கு பின் அசாமில் 532பேர் கைது

கௌகாத்தி, ஆக. 8—

அவசரநிலைப் பிரகடனம் செய்யப்பட்ட பின்பு அசாம் மாநிலத்தில் மட்டும் 532 பேர்'மிசா', டிஐஆர்போன்ற சட்டங்களின் கீழ் கைது செய்யப்பட்டுகாவலில்வைக்கப்பட்டுள்ளனர்.

இவர்களில் இரு சட்டமன்ற உறுப்பினர்களும் உள்ளனர்.

## வளர்ச்சி நிதிக்கு சென்னிமலையில்ரூ.201

சென்னிமலை, ஆக. 8—

இங்கு கடந்த 4-ந்தேதியன்று சோசலிஸ்ட் வாலிபர் முன்னணி சார்பில்அரசியல்நிலை விளக்கப்பொதுக் கூட்டம் நடந்தது. அதில், கோவை—நீலகிரி மாவட்ட சோசலிஸ்ட் வாலிபர் முன்னணியின் செயலாளர் தோழர் கே சி கருணாகரனிடம்'தீக்கதிர்' வளர்ச்சி நிதியாக ரூ. 201ஐ மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி கிளைச் செயலாளர் தோழர் சி எஸ் பொன்னுச்சாமி வழங்கினர்.

இக் கூட்டத்திற்கு தோழர் டி கே பழனிச்சாமி தலைமை வகித்தார்.

இக்கூட்டத்தில் கே சி கருணாகரன் மற்றும் வாலிபர் முன்னணி உதவிச்செயலாளர் என் வி தாமோதரன், திருப்பூர் குப்புசாமி, சென்னிமலை தோழர்கள் சி எஸ் பொன்னுச்சாமி, எம் லெட்சுமணன், என் கருப்புசாமி ஆகியோர் இன்றைய அரசியல் நிலையை விளக்கியும் அவசரநிலையின் தன்மைகளையும் விளக்கிப் பேசினர்.

கைத்தறித் துணிகள் தேங்கிக் கிடப்பது பற்றியும் அதனல் நெசவாளர்கள் படும் அவதி குறித்தும், அவர்களுக்கு நிவாரணம் அளிக்கும்படி மாநில அரசை வற்புறுத்தியும் தோழர் சி எஸ் பொன்னுச்சாமி பேசினர்.

## பிரதமர் இந்திராகாந்திக்கு இந்துமகா சபை ஆதரவு

புதுடெல்லி, ஆக. 5—

இந்திரா காந்தியின் 20அம்சபொருளாதாரத் திட்டத்தை முழு மனதுடன் வரவேற்பதாகவும் அத்திட்டத்தை அமுல் படுத்த நாட்டில் உள்ள தேசபக்தி கொண்ட சக்திகளெல்லாம் எல்லா வகையான சிரத்தையுடன் ஒத்துழைப்பு தருவார்கள் என நம்புவதாகவும் இந்துமகா சபையின் நிர்வாகக் குழு அறிவித்துள்ளது.

கடந்த ஞாயிற்றுக்கிழமைவரை அக்கமிட்டியின் கூட்டம் டெல்லியில் நடைபெற்றது. அக்கூட்டத்தில் மேற்கண்ட தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

மேலும் இந்திரா காந்தியின் பொருளாதாரத் திட்டத்தை அமுல்படுத்தும் பொறுப்போடு அதிகாரிகளுடன் இந்துமகாசபையின் அனைத்து கிளைகளும் ஒத்துழைக்க வேண்டும் லஞ்சம், கடத்தல் ஆகியவற்றை எதிர்த்து அனைத்து மட்டங்களிலும் போராட மக்களை ஒன்று திரட்ட வேண்டும் என்றும் இந்துமகாசபையின் தீர்மானம் கூறுகிறது.

மேலும் நியாயமான சுதந்திரமான தேர்தல் நடத்தப்படும் வகையில் தேர்தல் விதிகளை திருத்த உடனடி நடவடிக்கைகள் எடுக்குமாறும் பிரதமர் இந்திரா காந்தியை அத்தீர்மானம் கேட்டுக்கொண்டுள்ளது.

மேலும், அனைத்து மக்களுக்குமான ஒரு பொது சமூக விதியை உண்டாக்குமாறும் அத்தீர்மானம் அரசாங்கத்தை கேட்டுக் கொண்டுள்ளது.

இந்தியாவில் இந்து ராஜ்யம் ஏற்பட வேண்டும் எனனும் கொள்கையைக் கொண்ட வகுப்புவாத ஸ்தாபனம். கம்யூனிஸ எதிர்ப்பும் முஸ்லீம் எதிர்ப்பும் கொண்டது இந்துமகாசபை.

## இரு வியட்னும்களை ஐ. நா. வில் சேர்க்க அமெரிக்காவின் கடும் எதிர்ப்பு

### தென் கொரியாவையும் இழுத்து குழப்புகிறது

ஐ. நா. சபை, ஆக. 8—

தங்களை ஐக்கிய நாடுகள் சபையில்ஏற்றுக்கொள்ளும் பிரச்சனை பற்றிய மனுக்களை உடனடியாகப் பரிசீலிக்கவேண்டுமென்று வடவியட்னுமும் தென் வியட்னுமும் கோரியுள்ளன.

தென் கொரியாவையும் ஐ. நா. சபையில் ஏற்றுக் கொள்ளுவதற்கு ஆதரவு தேட அமெரிக்கப் பிரதிநிதிகள் ஆள்பிடிக்கும் படலத்தில் இறங்கி—அந்தப் பிரச்சினையை வியட்னும் பிரச்சினையுடன் போட்டுக் குழப்பினர்கள். இதை இரு வியட்னும்களும் பலமாக கண்டிக்கின்றன.

1975-ம் ஆண்டில் 10 நாடுகள் சுதந்திரம் பெற்றுள்ளன.

வடவியட்னுமும் தென் வியட்னுமும் தாங்கள் ஐ நா சபையின் முழு உறுப்பினர்களாக ஏற்கப்படும் முன்னதாகவே அதன் முதற்படியாக ஐ.நா. சபையில் பார்வையாளர் அலுவலகங்களைத் திறந்துள்ளன.

### அமெரிக்க நரி

தனது கைப்பாவையான தென்கொரியா அரசை' சந்தடிச்சாக்கில் ஐ. நா. சபைக்குள்புகுத்திவிட அமெரிக்க நரி அங்குமிங்கும் அலைந்து கொண்டிருக்கிறது.

வடவியட்னுமையும் தென் வியட்னுமையும், அத்துடன் தென்கொரியாவையும்- ஆக மூன்றையும் ஒரே பொட்டலமாக்கி ஐ. நா. வில் ஏற்க வேண்டுமென்று அமெரிக்கா வற்புறுத்தி வருகிறது. ஐ.நா வில் சேர்ப்பதாக இருந்தால் மூன்றையும் சேர்த்துக் கொள்ளட்டும், இல்லையானல் மூன்றையும் நிராகரித்து விடட்டும் என்றபோக்கில்தான் அமெரிக்க வஞ்சக நரி திட்டம் போட்டிருக்கிறது. இதைத்தான் இருவியட்னும்களும் கண்டித்ததுடன். தங்கள் பிரச்னையை தனியாகவும், தென்கொரிய பிரச்னையைத் தனியாகவும் ஒதுக்குவிட வேண்டுமென்று வற்புறுத்துகின்றன.

இரு வியட்னும்களையும் அங்கீகரிப்பதாக இருந்தால் தென்கொரியாவையும் அங்கீகரித்தே ஆகவேண்டுமென்று அமெரிக்கா பிடிவாதம் பிடிக்கிறது. அது நடக்காவிட்டால் இருவியட்னும்களையும் சேர்க்ககூடாது என்றுதனது அதிகாரத்தைப் பயன்படுத்தப் போவதாகவும் உறுமுகிறது.

### வடகொரியா கண்டனம்

ஐ நா வில் தன்னையும் சேர்கக வேண்டுமென்று வடகொரியா கோரவில்லை. ஆனல்ஐ.நா.வில் சேரமனுப் போட்டுள்ள தென் கொரியாவை அது கண்டித்துள்ளது. அதாவது "தென் கொரியா வடகொரியாவுடன் இணைய வேண்டுமென்றும் சொல்ல முடியாது அல்லது ஐ. நா சபையில் தன்னைச்சேர்த்துக் கொள்ள வேண்டுமென்றும் முடிவு எடுக்க முடியாது. காரணம் தென் கொரியா ஒரு சுதந்திர நாடு அல்ல. அங்கு 40 ஆயிரம் 'அமெரிக்க சிப்பாய்கள் முகாமிட்டிருக்கிருர்கள் "— என்று அம்பலப்படுத்தினர்.

## 157 இடங்களுக்கு 3000 பேர் மனு

அரியலூர், ஆக. 7—

திருச்சிமாவட்டம் அரியலூரில் உள்ள அரசினர் தொழிற்பயிற்சிப் பள்ளியில் (ஐ.டி.ஐ) சேர்ந்து பயிலுவதற்கு சுமார் 3 ஆயிரம்பேர் மனுச் செய்திருந்தனர். ஆனல்அப்பள்ளியில்உள்ள மொத்தஇடங்களோவெறும் 157 தான்.

எனவே, மனுச் செய்த 3 ஆயிரம் பேர்களில் ஆயிரம் பேருக்குத்தான்பேட்டிக்கான(இண்டர்வியூ) கார்டுகளே அனுப்பப்பட்டனவாம்.

பேட்டியில் 157 பேர் தான் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

## ஆசிரியர் பயிற்சி கல்லூரிகளில் இடங்கள் குறைப்பு

திருச்சி. ஆக. 8—

தமிழ்நாட்டில் ஆசிரியர் பயிறசிக் கல்லூரிகளில் உள்ள மாணவர்களின் எண்ணிக்கை 10 சதவீதம் குறைக்கப்படுகிறது. இதற்கான உத்திரவை தமிழ்நாடு கல்லூரிக் கல்வி இலாகா பிறபபித்துள்ளது.

தற்போது மாநிலத்தில் 23 பயிற்சிக் கல்லூரிகளில் சுமார் 3000 இடங்கள் உள்ளன. தற்போது அமுலாக்கப்படும் 10 சதவீத குறைப்பினல் அந்த எண்ணிக்கை 2700 ஆகக் குறைந்துவிடும்.

## இன்று (9—8—75)

மதுரையில் நடைபெறும்

மணவாளன் இன்னிசை கச்சேரி

இடம்: தத்தனேரி மந்தை திடல்

காலம்: மாலை 7 மணி.

## மக்கள் பிரதிநிதிகளுக்கு மேலும்புதியவசதிகள் காலத்தில் கடமையை முடிக்க

புதுடெல்லி, ஆக. 8—

மக்கள்பிரதிநிதிகள் என்ற முறையில் நாடாளுமன்ற உறுப்பினர்கள் தங்கள் கடமைகளை செய்து முடிக்க அவர்களுக்கு கூடுதலான புதிய வசதிகள் செய்து தருவதென நாடாளுமன்ற மக்கள் சபையில் ஒரு மசோதா நிறைவேற்றப்பட்டது.

இம்மசோதாவின்படி சாரச் செலவு. [illegible] செலவு, கட[illegible] உதவிகள் [illegible] களுக்கா[illegible] தனது [illegible] பயண[illegible] ஆதப[illegible] கொள்ளும்.

இம்மசோதா மீதான விவாதங்களின்மீது நாடாளுமன்ற அலுவலக அமைச்சர் ரகுராமையா பேசினர்.

அவர் தனது பேச்சின் போது மக்கள் பிரதிநிதிகளுக்கு அரச[illegible] கொடுக்க ஒப்புச்[illegible] [illegible]திகள், [illegible]

தீக்கதிர்

# கியூபாவை பகிஷ்கரித்தகொள்கை முடிவுற்றது

அமெரிக்கப் பிடிப்பிலிருந்து கியூபாநாடு பரிபூர்ண மாக விடுதலையடைந்த பிறகு, சுமார் 11 வருடங்களுக்கு முன்பு அரசியல ரீதியாகவும் பொருளாதார ரீதியாகவும் கியூபாவை பகிஷ்கரிக்க வேண்டுமென்று அமெரிக்கஏகாதி பத்தியத்தின் செல்வாக்கிலிருந்த "அமெரிக்க நாடுகளின் ஸ்தாபனம்" முடிவெடுத்திருந்தது. சோவியத் யூனியனும் சோஷலிஸ்ட்நாடுகளும்தான் தொடர்புவைத்துக் கொள்ள முடிந்தது. முதலாளித்துவ நாடுகள் தயக்கம் காட்டின. கியூபாவோடு வர்த்தகம் செய்யக்கூடாதென்ற அமெரிக் கத் தடையை தென்னமெரிக்க நாடுகள் மீறமுடியவில்லை. அத்தகைய நாடுகளின் வியாபாரக்கப்பல்கள் கியூபா துறை முகங்களை எட்டிப்பார்க்கக்கூட அஞ்சின.

இது ஓரளவுக்கு கியூபாவை பாதிக்கத்தான் செய் தது. தொழில் வளர்ச்சி எளிதில்ஏற்பட முடியவில்லை. கியூபா நாட்டின் முக்கிய உற்பத்திப்பொருளான சர்க்கரை ஏற்றுமதியைத்தான் கியூபா தனது பிரதான வருவாய்க்கு நம்ப வேண்டியிருந்தது. சர்வதேச மார்க்கெட்டில் சர்க் கரைக்கு நல்லவிலை ஏற்பட்டவுடன் கியூபாவின் வருமான மும் சென்ற வருடம் கணிசமாக அதிகரித்தது. தென்ன மெரிக்க நாடுகளின் விடுதலை இயக்கங்களுக்கு கியூபா ஆத ரவளித்ததும், சோஷலிசக்கொள்கைகளை தனது நாட்டில் அமுல் நடத்தியதும், அமெரிக்காவின் மிரட்டல்களுக்கு அடிபணிய மறுத்து எதிர்த்து நின்றதும்— கியூபாவுக்கு— எங்கும், அதிலும் குறிப்பாக தென்னமெரிக்க நாடுகளில் செல்வாக்குப்பெருகலாயிற்று. ஒவ்வொருவராக அரசியல தடையையும் வர்த்தகத்தடையையும் மீறிகியூபாவை அங்கீ கரித்து அதனுடன் உறவுவைத்துக்கொள்ள முன்வந்தார் கள்.

இந்த வளர்ச்சிப்போக்குகளின் விளைவாக அமெ ரிக்காவும் கியூபாவின்பால் தனது கொள்கையை மாற்றிக் கொள்ள நேர்ந்தது. கியூபாவைப் பரம விரோதியாகக் கருதும் கொள்கை பலன் தராது என்று உணர்ந்தது. சில அமெரிக்க "செனட்டர்கள்"— ஒரு நல லெண்ண தூது கோஷ்டியாக கியூபாவுக்கு அனுப்பப்பட்டு வரவேற்கப்பட்டனர். அமெரிக்காவில் கியூபாவின் பிரதிநிதி கள் சில இடங்களுக்கு செல்லக்கூடாதென்று விதிக்கப்பட் டிருந்த தடைகள் நீக்கப்பட்டன.

இந்தச் சூழ்நிலையில் தான் சென்ற வாரம் கூடிய "அமெரிக்க நாடுகளின் ஸ்தாபனம்" கியூபா, சம்பந்தமாக 11 வருடமாக அனுசரித்து வந்த தடையை மெஜாரட்டி வோட்டில் ரத்து செய்தது. அமெரிக்காவும் இந்த முடிவுக் குத் தனது ஆதரவை அளித்தது. கியூபாவின் தொழில்கள் அபிவிருத்தி காண்பதற்கும் இந்த முடிவு பெருதவி செய்யு மென்று நம்பலாம்.

ஏற்கெனவே சோவியத் யூனியனின் வாக்குறுதிப் படி அணுசக்தி உற்பத்தி நிலையமும் சர்க்கரை உற்பத்தி யில் அபிவிருத்திக்கான உதவும் நவீன யந்திரங்களும் கியூபாவில் அமைக்கப்பட்டு வருகின்றன. இனி அமெரிக்கா உள்பட இதர முதலாளித்துவ நாடுகளுடன் கியூபாவோடு பொருளாதார உறவுகளை வலுப்படுத்திக் கொள்ள முயற்சிக்குமென்று எதிர்பார்க்கலாம். ஏற்கெ னவே சில காலமாக, கியூபா அரசாங்கம் சில முதலா ளித்துவ நாடுகளோடு தனது தொழில் வளர்ச்சிக்கவசிய மான சில ஏற்பாடுகளை நிறுவியுள்ளது.

உதாரணமாக அர்ஜென்டினா நாட்டுடன் வருடத் திற்கு 20 கோடி டாலர்கள் வீதம் 6 வருடத்திற்கு கடன் ஒப்பந்தம் செய்துள்ளது. இதன் மூலம் சென்ற வருடம் நூற்றுக்கணக்கான போர்டு—பால்கன் மோட்டார்வண்டி கள் கியூபாவில் இறக்குமதியாகியுள்ளன. இதே பிரிட்டனுடன் 25 கோடி பவுனுக்கும், பிரான்சுடன் 50 கோடி டாலர்களுக்கும் சில முக்கியமான பொருட்களைபெற கியூபா ஒப்பந்தம்செய்துகொண்டுள்ளது. ஸ்பெயின் தேசத் தில் கியூபா அரசு கொடுத்துள்ள ஆர்டரை பூர்த்தி செய்ய சிறு கப்பல்களும், விசைப்படகுகளும் கட்டப்பட்டு வருகின்றன. இதர முதலாளித்துவ நாடுகளும் அணுகி ஒரு ஸ்க்ரூ ஆலை, பெரியதொரு பஞ்சாலை, ரெயில்வேகளை, துறைமுக அபிவிருத்தி, வியாபார கப்பற்படை, சிமெண்டு ஆலைகள், ஒரு மோட்டார் உற்பத்தி சாலை முதலியனவற் றிற்கும் கியூபா அரசு திட்டமிட்டுள்ளது. இவற்றிற்கெல் லாம் பெருமளவும் சர்க்கரை ஏற்றுமதி மூலமே பொருளா துபாயமுடியும். காலப்போக்கில் கியூபாவிலுள்ள நிக்கல் உலோக சுரங்கங்கள் நல்ல அபிவிருத்தி கண்டு பெரும் ஆதாயத்தைத் திரட்டித் தருமென்றும் எதிர்பார்க்கப்படு கிறது.

"அமெரிக்க நாடுகளின் ஸ்தாபனம்" கியூபா மீது விதித்திருந்த தடையை ரத்து செய்தது அமெரிக்க ஏகாதி பத்தியத்திற்கு ஏற்பட்ட ஒரு பெருந் தோல்வி மட்டுமல்ல, இதர முதலாளித்துவ நாடுகளும் கியூபாவுடன் வர்த்தக உறவுக்கு போட்டியிடுமென்றும் எதிர்பார்க்கலாம்.

## பிலிப்பைன்சில்
# அமெ. தளங்களுக்கு கட்டுப்பாடு

மணிலா, ஆக. 6—

பிலிப்பைன் சிலுள்ள அமெரிக்க தளங்கள் இருக் கும் வரை அவைகள் பிலிப் பைன்ஸ் அரசின் கட்டுப் பாட்டின் கீழ்தான் உபயோகிக்கப்பட வேண் டும் என்று அங்நாட்டு ஜனா தி பெர்டினண்டு மார் கூறியுள்ளார்.

மா [illegible]

கொள்ள பிலிப்பைன்ஸ் தானுகவே முன்வந்தது என் றும கூறினர்.

மேற்கு பசிபிக் சமுத் திர பகுதியில் ராணுவ தளங்களை அமைப்பதன் மூலம் உலக வல்லரசுகளின் பலத்தை சமத்துவப்படுத் தும் நோக்குடனே செய் யப்பட்டதாம்.

ஏப்ரலில் தென்வியட் வீழ்ச்சி ஏற்பட்ட அமெரிக்காவுடன் பரஸ்பர ங்களெல காகி என் [illegible]

## சிலி நாட்டில் நிகழ்ந்த நிகழ்ச்சிகள்
# இன்றுபோர்த்துகலில் நிகழ்கின்றன
### ஒரு இடதுசாரி பத்திரிக்கையின் எச்சரிக்கை

லிஸ்பன், ஆக. 6—

போர்த்துக்கலின் பல நகரங்களில் உள்ள கம்யூ னிஸ்ட் கட்சியின் ஸ்தாபனங்களையும், அலுவல கங்களையும் தாக்குவதும், தீ வைத்து கொளுத்துவதும் புஸ்தகங்களையும், தஸ்தா வேஜுகளையும்தீயிட்டுக்கொ ளுத்துவதும் ஆன காட்டு மிராண்டித் தாக்குதல்களை ஆத்திரமூட்டும் வகையில் நிலப்பிரபுக்களின், கிறிஸ் துவ சாமியார்களின் ஏனைய பிற்போக்கு சக்திகளின் பின்னல் உள்ள குண்டர் கள் மேற்கொண்டுள்ள னர்.

இந்த அடாவடித்தனங் களுக்கு 'ஜனநாயக சோச லிசம்' பேசும் போர்த்துக லின் சோசலிஸ்ட் கட்சியும் பாபுலர் ஜனநாயக கட்சியும் அரசியல் சாயம் பூசுகின் றன.

கம்யூனிஸ்ட் கட்சியை யும் அதன் ஸ்தாபனங்கள் மட்டுமின்றி ஏனைய இடது சாரி கட்சிகளும் ஸ்தாபனங் களும் தாக்கப்படுகின்றன.

### எதிர்ப்பு தெரிவிக்க பகிஷ்காரம்

போர்த்துக்கலின் வட பகுதியில் உள்ள விலா நோவா, பேமாலி கோவா, சாண்டோ டிஸ்ஸோ ஆகிய நகரங்களிலும் அஜோர்ஸ் தீவில் உள்ள போன்டா டெல்காடா நகரி லும் கம்யூனிஸ்ட் கட்சி, ஏனைய இடதுசாரி ஸ்தாப னங்கள் மீது பிற்போக்கு சக்திகள் தாக்குதல்தொடுத் தன.

அபோர்டோ என்னும் நகரில் கம்யூனிஸ்ட் அலு வலகங்கள் மீது பிற்போக்கு வாதிகள் தொடுத்துள்ள வெறியாட்டத்தை அடக்க போர்த்துக்கல் ராணுவம் விரைந்து சென்றுள்ளதாக கூறப்படுகிறது.

இத்தனையையும் நடத்த விட்டு விட்டு போர்த்துக்கல் சோசலிஸ்ட் கட்சியே கம்யூனிஸ்ட் கட்சி மீது குற்றஞ் சாட்டியுள்ளது

கம்யூனிஸ்ட் கட்சி தனது பொறுபபற்ற தன் மையில் நாட்டில் பலாத் காரத்தை ஏற்படுத்தியுள் ளது என்று அக்கட்சி கண்டித்துள்ளது.

இக்குற்றச்சாட்டுக்கு எதிர்ப்பு தெரிவிக்கும்வகை யில் அரசியல் நிர்ணய சபையை பகிஷ்கரிப்பது என கம்யூனிஸ்ட் கட்சி லிஸ்பனில் முடிவு செய் துள்ளது.

### 'செகுலோ' கருத்து

இடதுசாரி பத்திரிகை யான 'செகுலோ' என்னும் பத்திரிகையானது போர்த் துக்கலில் நிகழும் நிகழ்ச்சி களைப்பற்றி குறிப்பிடுகை யில், சிலி நாட்டு ஜனாதிபதி சல்வடோர் அலெண்டே யின் பதவி நீக்கலுக்கும் அவ ரது மரணத்துக்கும் காரண மாக இருந்த நிகழ்ச்சிகள் என்னவாக இருந்ததோ, அதே நிலைக்கு இட்டுச்செல் லும் நிகழ்ச்சிகள் இன்று போர்த்துக்கலில் நடக்கின் றன" என்று அப்பத்திரிகை குறிப்பிட்டுள்ளது.

உடனடியாக கலவர வாதிகளுக்கு எதி ராக பிற்போக்கு வாதிகளுக் கெதிராக ராணுவ இயக்கம் உடனடியாக நடவடிக்கை எடுக்கவேண்டும் என்றும் வற்புறுத்தியுள்ளது.

மேலும்,போர்த்துக்கலின் சோசலிச எதிர்காலத்தை அடகுவைக்கும் நிகழ்ச்சி நிகழாதிருக்கும் வகையில் நடவடிக்கை எடுத்தாக வேண்டும். எனவே நாட் டிற்கு எதிராக நடைபெறும் ஆக்கிரமிப்புகளை நாம் அனு மதிக்க முடியாது என்றும் அப் பத்திரிகை எச்சரித் துள்ளது.

மேலும் ஆடம்பரக்காரர் கள்,அடுத்தவர்களைவீணுக்கு வதற்கும் நாம் சந்தர்ப்பம் அளிக்கவும் முடியாது என் றும் குறிப்பிட்டுள்ளது.

# காலத்தின்வேகத்திலே கொண்ட கோலம்

டெஹ்ரான், ஆக.6—

உள்நாட்டு அரசியலி லும், சர்வதேச அரசியலி லும் கம்யூனிச எதிர்ப்பை யே கனவிலும் நனவிலும் கொண்டுள்ள இரான் மன் னன் ஷாவின் ஆட்சியிலும் தொழில் அதிபர்களும், உயர்மட்ட அரசாங்க அதி காரிகளும் மாநில கவர்னர் களும், வியாபாரிகளும் கைது செய்யப்பட்டுள்ள னர். தொழிற்சங்க தலைவர் களும் கைது செய்யப்பட் டுள்ளனர்.

இவர்களெல்லாம் கைது செய்யப்பட்டுள்ளார்கள் என்ற செய்தியை இரான் அரசாங்கமே அறிவித்துள் ளது. கைது செய்யப்பட் டோரின் எண்ணிக்கை வெளியிடப்பட்டது. ஆனல் யார் யார் என்பது வெளி யிடப்படவில்லை.

கடைந்தெடுத்த பிற் போக்குவாதி ஷா மன்னன் தொழில் அதிபர்களையும். கவர்னர்களையும், உயர்மட்ட அதிகாரிகளையும், தொழில் சங்க அதிகாரிகளையும், கைது செய்தது ஏன் தெரி யுமா?லாபநோக்கிற்கும்லஞ் சம்ஊழல்களுக்குஎதிராகவும் எடுக்கப்பட்ட நடவடிக்கை களின் தொடர்ச்சியாகவே கைது நடவடிக்கைகள் எடுக்கபபட்டதாக இரான் அரசாங்கம் அறிவித்துள் ளது.

### கைதானேர் யார் யார்?

கைது செய்யப்பட்ட வர்கள் இரான்நாட்டு சமு தாயத்தில் எந்த அந்தஸ்தில் உள்ளவர்கள் தெரியுமா?

ஒரு துணை கவர்னர் ஜெனரல், ஒரு கவர்னர்உட் பட 4 மாநில அரசியல் அதி காரிகள். இந்த நான்கு பேருக்கும் கிடைக்கவிருக் கும் தண்டனை அபராதம் அல்லது சிறைதண்டனை அல்லது இரண்டுமே கிடைக்குமாம்.

மேலும் ஏராளமான தொழில் முதலைகளும், லட் சாதிபதிகளும், வியாபாரி களும் தொழிற்சங்கத் தலை வர்களும் கைது செய்யப் பட்டு ஏற்கனவே சிறையில் தள்ளப்பட்டனராம்.

காலத்தின் வேகம் இரான் மன்னன் ஷாவைக் கூட எங்கெங்கோ தள்ளு கிறது.

# அரசியல் விளக்கப் பொதுக்கூட்டம்

தாழையூத்து. ஆக. 8—

கடந்த 3 ந் தேதி யன்று நெல்லை நகரிலும், 5 ந் தேதி யன்று தாழையூத்திலும் மக் கள் எழுச்சிக் குழு சார்பில் இன்றைய அரசியல் நிலை விளக்கப் பொதுக்கூட் டம் நடந்தது.

### நெல்லை நகர்

நெல்லை நகரில் நடந்த கூட்டத்தில் சு. பாலவிநாய கம் (மார்க்சிஸ்ட்), அழகிய நம்பி (திமுக), சண்முகவேல் (ஸ்தாபனகாங்கிரஸ்).டி.ஆர். கிருஷ்ணன் (ஜன சங்கம்) பொன்னையா (சர்வோதய சங்கம்) ஆகியோர் பேசி னர்.

### தாழையூத்து

இங்கு லெனின் திட லில் மார்க்சிஸ்ட் கம்யூ னிஸ்ட் கட்சியின் மாவட்ட செயலாளர் தோழர் சு.பால விநாயகம்தலைமையில் நடந்த பொதுக்கூட்டத்தில் சுந்தர மகாலிங்கம் (ஜனசங்கம), என்.எஸ்,மணி(மார்க்சிஸ்ட்) பொன்னையா (சர்வோதய சங்கம்), சேதுராமலிங்கம் (ஸ்தாபனக் காங்கிரஸ்) டி ஆர் சங்கரநாரயணன் (சுதந்திரா) ஆகியோர் பேசி னர்.

### மத்திய அரசுக்கு வேண்டுகோள்

இக்கூட்டங்களில் அவ சர நிலையை ரத்துசெய்யக் கோரியும், 'மிசா' பாது காப்புச் சட்டங்களின் கீழ் கைது செய்யப்பட்டு காவ லில் வைக்கப்பட்டுள்ள அர சியல் தலைவர்களையும் ஊழி யர்களையும் உடனேவிடுதலை செய்யக் கோரியும் மத்திய அரசுக்கு வேண்டுகோள் விடுக்கப்பட்டது.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு சார் பில் தீக்கதிர் அச்சகத் தில் (6-16 பைபாஸ் ரோடு, மதுரை 625018) அச்சிட்டு வெளியிடுப வர் ஆசிரியர் கே. முத் தையா.

## ஆசிரியருக்கு
# நெசவாளர் துயர் தணிக்கப்படுமா?

ஐயா,

மதுரை மாவட்டம் தேனிப்பகுதியில் டி.சுப்புலா புரத்தில் நெசவுத் தொழி லாளர்களின் வாழ்க்கை நிலை மிகவும் மோசமாக உள்ளது. இவர்களுக்குநாட் கூலி ரூ. 2-17 முதல் ரூ.3-50 வரை கொடுக்கப்படுகிறது.

பாவுக்கு ஊடை நூல் இல்லாமல் பலவாரங்கள் தொழில் நடப்பதே இல்லை. அதே சமயத்தில் விலைவாசி வேறு ஏறிக்கொண்டே போகிறது. படி அரிசி ரூ. 5-60 முதல் ரூ. 6 வரை யிலும் சோளம் ரூ. 2-75 முதல் ரூ. 3 வரையிலும் விற் கிறது. எங்களுக்குக்கிடைக் கும் இந்த அறபக் கூலியை கொண்டுஅல்லது வேலையே இல்லாத நிலையில் — எப்படி உணவுப்பொருட்கள்வாங்கு வது? எனவே வெளியூர் சென்று சமாளிக்கலாம் என்று நினைத்து வெளியூர் சென்ருலோ, அங்கும் தொழில் கிடைக்காமல் பிச்சை எடுக்கும் அவலம் தான்.

எனவே இங்நிலையைப் போக்க மத்திய, மாநில அர சுகள் தலையிட்டு, நீண்ட காலக் கடன்கள் வழங்கி நெசவாளர்கள் வாழ வழி வகை செய்ய வேண்டும்.

கடந்த 17—2—75ல்நடந்த அர்த்தால்-மறியல் போராட் டத்தின் விளைவாக வாரத் திற்கு 5 கிலோ அரிசி, 5கிலோகோதுமை, 1கிலோ மைதா தருவது என்றுஅரசு அதிகாரிகள் முடிவு செய் தார்கள் ஆனல் இது வரை சரிவர கிடைக்கவில்லை. எங் கள் ஊரில் உள்ள ரேசன் கடைகளிலும் ஒழுங்காக சப்ளை இல்லை.

தவிர அண்மையில்பெய்த மழையின் காரணமாக, ஏற்கனவே மோசமான நிலை யிலிருந்த வீடுகள் இடிந்து விழுந்து விட்டன. குடியி ருக்க வீடு இன்றி குழந்தை குட்டிகளுடன் கஷ்டப்படுகி ரேம்.

தவிர, சாலை வசதியும் போக்குவரத்து வசதியும்இல் லாமலும் பெரிதும் அவதிப் படுகிரேம்.

எனவே, இப்பிரச்னைகளில் தலையிட்டு தக்க நடவடிக் கைகள் மேற்கொள்ள வேண்டும் என்று அரசு அதிகாரிகளைக் கேட்டுக் கொள்கிரேம்.

இவண்
டி. சக்திவேல்
மற்றும் தோழர்கள்
டி. சுப்புலாபுரம்

## இவ்வாண்டு பி. யூ சி. மாணவர் எண்ணிக்கையில்
# படுவீழ்ச்சி

திருச்சி, ஆக. 6—

தமிழ்நாட்டில் உள்ள 187 கலைக் கல்லூரிகளில் (சென்னை, மதுரை பல்கலைக் கழகங்களில்இணைக்கப்பட்ட வை) பியூசி-க்கானஇடங்கள் இன்னும் 20 ஆயிரம் காலி யாக இருக்கின்றது.

ராமநாதபுரம், மதுரை, திருநெல்வேலி, திருச்சி, ஆகிய மாவட்டங்களில் ஏற் பட்ட கடுமையான வறட்சி யும், 74-ம் ஆண்டை விட 75—ம் ஆண்டில் எஸ்.எஸ் எல். சி. மாணவர்கள் அதி கம் வெற்றி பெற்றதுமே பி. யூ. சி. யில் அதிக இடங் கள் காலியாய் கிடப்பதற்கு காரணம் என கூறப்படு கிறது.

இவ்வாண்டு (75.ல்) 1 லட் சத்து 20 ஆயிரம் பேர் எஸ். எஸ். எல். சி. யில் வெற்றி பெற்று உள்ளனர். 74-ம் ஆண்டு அக்டோபர் தேர்வில் பிரைவேட்டாக எழுதியவர்கள் 5500 பேர் வெற்றி பெற்றிருந்தனர். அவர்களில் 75 ஆயிரம் பேர ாவது பி. யூ. சி. யில் சேர் ந்திருப்பார்களா என்பது சந்தேக மாக உள்ளது.

### வீழ்ச்சிக்கான பிரதான காரணம்

தொடர்ச்சியாக கடந்த 3 ஆண்டுகளாக பி. யூ. சி. யில் சேரும் மாணவர்களின் எண்ணிக்கை படுவீழ்ச்சி அடைந்து வருகிறது. இதில் இவ்வாண்டு கடுமையான வீழ்ச்சி ஏற்பட்டுள்ளது. இன்றைய கல்லூரி கல்வி, வாழ்க்கைக்கு உத்திரவாத மளிக்காதது என்ற உணர் வும் இன்றைய கல்வி முறை மீது பெற்ரோர்களுக்கும். மாணவர் களுக்கும் ஏற்பட்டுள்ள நம் பிக்கையின்மையும் இவ் வீழ்ச்சிக்கு ஒரு பிரதான காரணமாகும். பி.யூ.சி.யை முடித்துவிட்டு பட்டவகுப்பு களையும், மேல் பட்ட வகுப்பு களையும் முடித்தவர்களெல் லாம் வேலை கிடைக்கா மல் வீதியில் அலைவதை யும் வீட்டுக்குள் வேதனை யால் அடைந்து கிடப் பதையும் பார்க்கும்போதெல் லாம் இக்கல்வி மீது எப் படி நமபிக்கை வரும்? பி. யூ. சி. மாணவர்களின் எண்ணிக்கை வீழ்ச்சி அடையாமல் இருக்குமா?

### ஏதோ ஒரு நம்பிக்கையில்

இதன் தொடர்ச்சியாக தான் தாகைவோ, தாங் களாகவோ ஏற்படுத்திக் கொண்ட ஒரு நம்பிக்கை யில் ஏதாவது படிக்கவேண் டும் என்ற நிலையில் பி,யூ.சி. யில் சேர்வதை குறைத்து விட்டு தொழில் கல்வியான பாலிடெக்னிக் கல்லூரி யிலும் தொழில் பயிறசி நிலையங்களிலும் சேர்வதற்கு முனைந்து நிற்கின்றனர்.

தமிழ்நாட்டின் இரு பல் கலைகழகங்களில் 187 கலைக் கல்லூரிகள் உள்ளன. அதில் சென்னை பல்கலைக் கழகத்தில் 112-ம் மதுரைபல் கலைக்கழகத்தில்65 கலைக்கல் லூரிகளும உள்ளன. இக் கல்லூரிகளில் பி யூ சி -க் கான மொதத இடங்கள் 95 ஆயிரம். இதில்தான் இன்னும்20 ஆயிரம்இடங்கள் காலியாக உள்ளன.

# தமிழ்நாட்டில் மட்டும்தான் விலை குறையவில்லை என்கிருர் சி. எஸ்.

புதுடெல்லி, ஆக. 6—

தமிழ் நாட்டைத் தவிர மற்ற ஏனைய மாநிலமெங்கும் பொதுவான விலைவாசி மட் டம் குறைந்திருக்கிறது என் கிருர் மத்திய நிதிஅமைச்சர் சி சுப்பிரமணியம்.

டெல்லி டெலிவிஷன் பேட்டியில் காட்சியளித்த சுப்பிரமணியம் மேற்கண்ட வாறு கூறினர்.

தமிழ்நாட்டில் விலைகள் உயர்ந்து கொண்டிருக்கின் றன. ஒருவேளை அங்கு அவ சர நிலைமை இல்லா ததால்அவ்வாறு இருக்கலாம் என்றும் விளககம் கூறினர்.

மேலும்கோதுமை,சீனி பயறுகள், சமையல் எண் ணைகள் ஆகிய அத்தியாவ சியப் பொருட்களின் விலை கள் குறைந்துள்ளன. நாட் டில் தொழில் அமைதி ஏற் பட்டுள்ளது. மேலும் நாட் டில் நல்ல மழை பெய்துள் ளது. எனவே, விலைவாசி இன்னும் குறையும் என் கிருர் சுப்பிரமணியம்.

### குறைந்த விலைக்கு கிடைக்குமாம்

மேலும் வருடாந்திர வளர்ச்சி 5 சதவீதத்திலி ருந்து 6 சதவீதம்வரை ஏற் படுத்துவது என்ற பொரு ளாதார திட்ட குறிக்கோளை அடையமுடியும் என்றும் என்றுமில்லாத வகையில் 11 கோடியே 40 லட்சம்டன் தானியம் உற்பத்தி செய்யும் நிலையில் நாடு இருப்பதாக வும் அவர் டெலிவிஷன் காட்சியில் கூறினர்.

நிலக்கரி உற்பத்திகூட 9 கோடி டன்னுக்கு உயரும் நிலை உள்ளது என்றும் அதன் தொடர்ச்சியாக பொருட்களின் போக்கு வரத்து வசதி முன்னேற்றம் ஏற்படும் என்றும்இறுதியாக குறைந்த விலைக்கு பொருட் கள் கிடைக்கும் என்றும் அவர் அறிவிப்பு கொடுத் துள்ளார்.

## சோசலிஸ்ட் வாலிபர் முன்னணி
## மதுரை — முகவை மாவட்ட
# முதல் மாநாடு
### ஆக. 15-ல் மதுரையில் நடக்கிறது

மதுரை, ஆக. 8—

மதுரை—முகவை மாவட்ட சோசலிஸ்ட் வாலி பர் முன்னணியின் முதலா வது மாநாடு வருகிற 15-ந் தேதியன்றுமதுரை மாகாளி பட்டியில் உள்ள மாநக ராட்சி திருமண மண்டபத் தில் நடக்கவிருக்கிறது.

இம்மாநாட்டில் மார்க் சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி யின் மாநிலச் செயலாளர் ஏ. பாலசுப்ரமண் யம், தமிழக சிஐடியூ பொதுச்செயலாளர் ஆர். உமாநாத், இந்திய மாணவர் சங்க (எஸ் எப் ஐ) துணைத்தலை வர் என். ராம், தமிழகமாதர் சங்க துணைச் செயலாளர் மைதிலிசிவராமன், கோவை —நீலகிரி மாவட்ட சோச லிஸ்ட் வாலிபர் முன்னணி யின் செயலாளர் கே.சி.கரு ணாகரன் ஆகிய தோழர்கள் பங்கு கொண்டு சிறப்புச் சொற்பொழிவு ஆற்றுவார் கள்.

### பொதுக்கூட்டம்

அன்று மாலை 7 மணியள வில் கூடலழகர் பெருமாள் கோவில் திடலில் நடை பெறும் பொதுக்கூட்டத்தி லும் தலைவர்கள் பேசுவர்.

### 25 உறுப்பினர்களுக்கு ஒரு பிரதிநிதி

இம்மாநாட்டில் மதுரை. முகவை ஆகிய இரு மாவட் டங்களிலிருந்தும் 25 உறுப்பி னர்களுக்குஒருபிரதிநிதிவிதம் நூற்றுக்கணக்கான பிரதி நிதிகள் கலந்து கொள்வார் கள். மாநாட்டுப் பிரதிநிதிக் கட்டணமாக ரூபாய் ஒன்று வீதம் வசூலிக்கப்படும்.

இந்தமாநாட்டினை வெற் றிகரமாக நடத்திட வாலிபர் முன்னணியின்தலைவர்களும் முன்னணித் தோழர்களும் இரவும் பகலுமாக சுறுசுறுப் பாக இயங்கிவருகிருர்கள்.

# விவசாயத் தொழிலாளர்களின் போராட்டம் வெற்றி

தஞ்சாவூர், ஆக. 6—

திருக்காட்டுப்பள்ளி அரு கில் உள்ள ஒரத்தூர் கிராம விவசாயத்தொழிலாளர்கள் செங்கொடிச் சங்கமான தஞ்சை வட்ட விவசாயத் தொழிலாளர் சங்கத்தின் கீழ் அணி திரண்டு போராடி கூலி உயர்வு பெற்றனர்.

கடந்த 1-ந் தேதி முதல் வேலை நிறுத்தப்போராட்டத் தில் ஈடுபட்டனர். 3-ந் தேதி யன்று தஞ்சை வட்ட தாசில் தாரும் மற்றும் ஏனைய அதி காரிகளும் தலையிட்டு அவர் கள் முன்னிலையில் பேச்சு வார்த்தை நடத்தினர்.

விவசாயத்தொழிலாளர் சங்கத் தலைவர்கள் கே ரெத் தினம்,கே.பழனி,மாணிக்கம் பெ மணியரசன் மற்றும் பல தோழர்களும், மிராசுதார் கள் தரப்பில் பலரும் கலந்து கொண்டனர்.

பேச்சு வார்த்தையின் இறுதியில் ஆண்களுக்கு ரூ 5-50 என்றும், பெண் களுக்கு ரூ. 3-50 என்றும், கூலியை உயர்த்தித் தர ஒப் பந்தம் ஏற்பட்டது.

ஒன்றுபட்டுப்போராடுவ தன் மூலமே வெற்றிகளை ஈட்ட முடியும் என்ற உண் மையை உணர்ந்து இவ்வட் டாரத்தில் உள்ளவிவசாயத் தொழிலாளர்கள் ஆர்வத்து டன் செயலாற்றுகின்றனர்

# இடி, மழையை திசை திருப்பலாம்

மாஸ்கோ, ஆக. 9—

லெனின்கிராடு நீரியல் வானிலை ஆய்வு நிலையமும் ஜார்ஜிய விஞ்ஞானப் பேர வையின் புவி பௌதிகவியல் கூடமும் கூட்டாக ஆராய் ச்சி நடத்தி,இடி மழையைத் திசை திருப்ப முடியும்'என்று என்றுகண்டுபிடித்துள்ளன.

மேகக் கூட்டங்கள் இடி மேகங்களாக மாறுவதற்கு முன்பு, மின்காந்த அலை களைப் பெரும் அளவில் வீசு கின்றனவாம். இந்த மின் காந்த அலைகளை விசேஷ சாதனங்களின் மூலம் 'பிடிக் கும்' விதத்தைச் சோவியத் நிபுணர்கள் கண்டுபிடித்துள் ளனர்.

இடி மழை பெய்யக் கூடிய நிலை உருவாவதற்கு முன்பு, மேகக்கூட்டங் களின் தன்மைகளை ஆராய் ந்து, ஆலங்கட்டி மழை எப் பொழுது பெய்யும் என்பதை முன்கூட்டியே அறிவிக்க முடியும். இடி மழையுடன் கூடிய புயலின் அமைப்பை யும் நிர்ணயிக்க முடியும் என் பதும் சோதனையின் மூலம் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

இடி மழையுடன் கூடிய புயலின் தன்மையை அறி வது, விமான,கப்பல்போக்கு வரத்துக்கு உபயோகமான தாகவிருக்கும்.

வான் பௌதிகத்துறை யில் இதர பிரச்னைகளை அறி வதிலும் சோவியத் நிபுணர் கள் ஈடுபட்டுள்ளனர்.

ஆலங்கட்டி மழையை திசை திருப்புவதன் மூலம் பண்ணைகளையும், பயிர்களை யும் அபாயத்தினின்றுகாக்க முடிகிறது. உலகிலேயே முதன் முதலாக சோவியத் நிபுணர்கள் இதனை செயல் படுத்தியுள்ளனர். ஆலங் கட்டி மழையைத் தடுப்ப தற்கு சோவியத் யூனியன் கையாளும் முறைகளை ஹங்கேரி, பல்கேரியா போன்ற இதர நாடுகளும் பின்பற்றுகின்றன.

## மார்க்சிஸ்ட் பார்வர்டு பிளாக்
# சேர்மன் காலமானர்

கல்கத்தா. ஆக. 5—

மார்க்சிஸ்ட் பார்வர்டு பிளாக் கட்சியின் சேர்மன் திரு அமரேந்திரநாத் போஸ் கடந்த ஞாயிற்றுக்கிழமை யன்று திடீரென மாரடைப் பால் காலமானுர். அவ் ருக்கு வயது 87. திருமண மாகாதவர்.

இவர் சிகிச்சைக்காக, கல்கத்தா மருத்துவக் கல் லூரி ஆஸ்பத்திரியில் அனு மதிக்கப்பட்டு, தீவிர சிகிச் சை அளித்த போதிலும் அவரது உயிரைக் காப் பாற்ற இயலவில்லை.

இவர் மாநில சட்ட மன்ற முன்னுள் உறுப்பின ரும் ஆவார். மூன்று முறை தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கி ருர்.

நேதாஜி சுபாஸின் நெருங்கிய சகாவான இவர் சுதந்திரப் போராட்ட காலத் தில் 14 ஆண்டுகள் சிறை யில் இருந்தார்.